[5th November 1958

*Cultivation of potatoes in the Nilgiris district*

* 873 *Q.*—SRI K. SATTANATHA KARAYALAR: Will the Hon. the Minister for Home be pleased to state—

(*a*) whether it is a fact that the potato growers of the Nilgiris district are finding it more and more unecnomic to grow potatoes;

(*b*) if so, what are the reasons; and

(*c*) what steps the Agriculture Department have taken to assist them?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: (*a*) Yes, Sir. The general yield of potato is deteriorating in the Nilgiris year after year especially outside 5 miles radius from Ootacamund town; and

(*b*) & (*c*) A statement[a] is placed on the table of the House.

SRI K. SATTANATHA KARAYALAR: இந்த உருளைக்கிழங்கு சாகுபடியில் லாபம் குறைந்து கொண்டு வருவதற்கு முக்கிய காரணம் உருளைக்கிழங்கு விதைகள் மோசமாக இருப்பதுதான் என்று கூறப்படுகிறது. அதற்காக உறிமாசல் பிரதேசத்தில் இருந்து விதைகள் வரவழைக்கப்பட்டனவா ? அந்த விதைகள் எப்படி ? எந்த முறையில் பயன்பட்டன என்று சொல்ல முடியுமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: சுத்தமான விதைகள் இல்லை என்பதுதான் முக்கிய காரணம். ஆனால் அவைகள் உறிமாசல் பிரதேசத்திலிருந்து வந்தால் போதாது. ஸ்காட்லண்டில் இருந்துதான் வரவேண்டும். நூற்று இருபது டன் விதைகள் முன்பு வரவழைக்கப்பட்டன. இப்பொழுது அவையெல்லாம் கெட்டுப்போய்விட்டன. இப்பொழுது இன்னும் 120 டன் விதைகள் ஸ்காட்லண்டில் இருந்து வரவழைக்க வேண்டுமென்பது யோசனை.

SRI J. MATHA GOWDER: உருளைக்கிழங்கு சாகுபடி செய்யும் பூமியில், ஒரே பூமியில் அடிக்கடி பயிரிடுவதால் உருளைக்கிழங்கின் தரம் குறைந்து விடுகிறது என்பது சர்க்காருக்குத் தெரியுமா ? அப்படி தெரிந்திருந்தால் அதே பூமியில் அடிக்கடி பயிரிடுவதை நிறுத்தும்படி அங்குள்ளவர்களிடம் சொல்லி அவர்களுக்கு பயிரிட வேறு பூமி கொடுப்பதற்கு அரசாங்கத்தினிடம் ஏதாவது திட்டமிருக்கிறதா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: எல்லோருக்கும் வேறு இடம் கொடுப்பது என்பது கஷ்டமான காரியம். உருளைக்கிழங்கு பயிரிடுவதில் எப்படியும் லாபம் இருப்பதால் அங்கு பயிரிடாதீர்கள் என்று சொல்லவேண்டியதில்லை. மேலும், மண் அரிப்புத் திட்டத்தையொட்டி சொன்னால் கூட சாதாரணமாக அவர்கள் கேட்பதில்லை. அதுதான் சிரமம்.

SRI K. SATTANATHA KARAYALAR: அடுத்த முக்கிய காரணம் மண் அரிப்பு. இதற்காக என்னென்ன நடவடிக்கைகள் எடுக்கப்பட்டிருக்கின்றன ? அதைத் தடுப்பதற்குள்ள நடவடிக்கைகள் வெற்றிகரமாக நடப்பதில்லை என்று சொல்லப்படுகிறது. அதற்கு காரணம், விவசாயிகளுக்கு போதுமான முன் பணம் போட வாய்ப்பு இல்லாததுதான். ஆகவே முன் பணத்திற்காக, அவர்களுக்கு கடன் உதவி அளிக்க சர்க்கார் முன்வருமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: மண் அரிப்புத் திட்டம் இந்தியாவில்தான் முதன்மையாக நடத்தப்படுகிறது. நீலகிரியில் இது வெற்றிகரமாகத்தான் நடக்கிறது. விவசாயிகளும் அதை நன்கு பயன்படுத்திக்கொண்டிருக்கிறார்கள். இன்னும் இது விஸ்தரிக்கப்படவேண்டியிருக்கிறது. அதில் கவனம் செலுத்தப்பட்டு வருகிறது.

---

[a] Printed as Appendix I on pages 722–723 infra.

5th November 1958]

SRI N. MARUDACHALAM : உருளைக்கிழங்கு உற்பத்தி செய்வது நீலகிரியில் மட்டுந்தானு ? வேறுயிடங்களிலும் உற்பத்தி செய்யப்படுகிறதா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : நமது ராஜ்யத்தில் மொத்தம் 30,000 ஏக்கரில் உருளைக்கிழங்கு உற்பத்தியாகிறது. அதில் 29,300 நீலகிரியில். கொடைக்கானல், ஏற்காடு, ஹோசூர் போன்ற இடங்களிலும் உருளைக்கிழங்கு சாகுபடி செய்யப்படுகிறது.

*Children's Theatres*

* 874Q.—SRI M. C. MUTHUKUMARASWAMY : கனம் நிதி அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

(அ) சிறு பிள்ளைகளுக்கென படக் காட்சி சாலைகள் (Children's Theatres) எத்தனை ஜில்லாக்களில் அரசாங்கம் தொடங்க உத்தேசித்துள்ளது ?

(ஆ) அவைகள் எங்கெங்கே ?

(இ) அதற்கென ஒதுக்கியுள்ள உத்தேசத் தொகை எவ்வளவு ?

THE HON. SRI C. SUBRAMANIAM : (அ), (ஆ) சிறு பிள்ளைகளுக்கான படக் காட்சி சாலை (Children's Theatres) சென்னையில் மட்டும்தான் உள்ளது. வேறு ஜில்லாக்களில் எங்கும் தொடங்க அரசாங்கத்திற்கு உத்தேசமில்லை.

(இ) படக் காட்சி சாலைக்கு ஆரம்பத்திலிருந்து 1959 மார்ச்சு மாதம் 31-ந் நாள் வரை சுமார் ரூ. 1,53,060 செலவாகும் என மதிப்பிடப்பட்டிருக்கிறது. அதன் பிறகு வருடாவருடம் சுமார் ரூ. 18,000 செலவாகலாம் என்றும் எதிர்பார்க்கப்படுகிறது.

SRI M. C. MUTHUKUMARASWAMY : வேறு ஜில்லாக்களில் இந்த படக் கதிரை ஆரம்பிக்க முடியவில்லை என்றாலும் சென்னையில் நடக்கிற இந்த சிறுவர்களுக்கான கதிரை ஜில்லா தலை நகரங்களிலாவது குறிப்பிட்ட காலங்களில் கொண்டு போய் அங்கு நடத்த அரசாங்கம் முன் வருமா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : இப்பொழுதுதான் இங்கு ஆரம்பித்திருக்கிறோம். இந்த அனுபவத்தைக் கொண்டு, இதில் வெற்றி ஏற்படுமானல் ஜில்லாக்களில் இம்மாதிரியான படங்களை காண்பிக்க ஏற்பாடு செய்யலாம்.

SRI K. ANBAZHAGAN : சிறுவர்களுக்காண திரைப்பட அரங்கில், சென்னை நகரில் உள்ள ஆரம்பப் பள்ளிக்கூட குழந்தைகளுக்கு மாலைக்காட்சி, மாட்டினிஷோ மூலம், ஒவ்வொரு நாளும் குறிப்பிட்ட இரண்டு மூன்று பள்ளி மாணவர்களுக்கு காண்பித்து அதன் மூலம் அவர்களின் அறிவை வளர்க்க அரசாங்கம் திட்டமிடுமா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : இதே மாதிரித் தான் இப்பொழுது திட்டமிடப்பட்டிருக்கிறது. ஒவ்வொரு சனிக்கிழமையும், ஞாயிற்றுக்கிழமையும் பள்ளிக்கூட குழந்தைகளுக்கு ஒவ்வொரு பகுதியில் உள்ள பள்ளிக்கூட குழந்தைகளை அழைத்து இந்தக் காட்சிகளை காண்பிக்க ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது.

SRI K. B. S. MANI : சென்னையில் காண்பிக்கப்படுகின்ற இந்த படங்களை அதிகமாக காப்பி எடுத்து மற்ற தாலுக்காக்களில் இருக்கும் தியேட்டர்களுக்கு கொடுத்து அந்தந்த இடங்களில் இருக்கிற குழந்தைகளுக்கு காண்பிப்பதற்கு அரசாங்கம் ஏதாவது ஏற்பாடு செய்யுமா ? 9-30 a.m.

THE HON. SRI C. SUBRAMANIAM : இங்கு ஏற்படும் அனுபவத்தைக்கொண்டு மற்ற இடங்களுக்கும் இந்த திட்டத்தை விஸ்தரிக்கப்படுவதைப்பற்றி அரசாங்கம் ஆலோசனை செய்யும்.